# அறிவுச் சுடர் வாசகம்

## இரண்டாம் புத்தகம்

[Paper used : 24 lbs. White Printing]

ஆசிரியர் :

திரு. ச. இராமானுஜம் M.A., M.Ed.




வேங்கடராமா அண்டு கம்பெனி
1/C, அன்டர்சன் தெரு, சென்னை–1

 1958 [விலை 44 ந.பை.

முதற் பதிப்பு—பிப்ரவரி, 1958



# AUTHOR'S NOTE

The author's thanks are due to Vidwan Smt. Muthulakshmi Ammal, who has helped him in preparing this series. With the kind permission of the author's and their representative's suitable poems have been included in this series. My thanks are due to them also.

At the time of editing this series the author was holding the post of Co-ordinator of Extension Services, Teachers' College, Saidapet. This work is not an officially sponsored one and the readers are not official publications.

Saidapet. S. RAMANUJAM



Kabeer Printing Works, Madras (3727)

# முன்னுரை

அறிவுச் சுடர் வாசகம் என்னும் பெயருடன் வெளி வரும் இவ்வரிசைப் பாடப் புத்தகங்கள் அரசியலார் 1957-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் வெளியிட்டுள்ள புதிய பாடத் திட்டத்தின்படி எழுதப் பெற்றவையாகும்.

பாடத் திட்டம் எதிர்பார்ப்பது போல ஏற்ற பாடல் களும், உரைநடைப் பாடங்களும் இப்புத்தகங்களில் அமைக்கப் பட்டுள்ளன. எளிய நடையில் எழுதப்பட்ட புலவருடைய வரலாறுகளும், நாட்டுத் தலைவர்களுடைய வரலாறுகளும், இடம் பெற்றுள்ளன. பாடங்களின் அடியில் தகுந்த பயிற்சிகள் கொடுக்கப்பட்டுள்ளன.

இப்பாடப் புத்தக வரிசையை எழுதியுள்ள திரு. ச. இராமானுஜம் அவர்கள் பல ஆண்டுகள் பள்ளிக்கூட கண்காணிப்பாளராக இருந்தவர். ஆசிரியர் கல்லூரியில் உளநூல் கற்பிக்கும் துணைப்பேராசிரியராகப் பணியாற்றி யுள்ளார். M.Ed. பட்டம்பெறப் படிக்கும் மாணவர் கட்குக் 'கல்வி ஆட்சி முறை' பற்றிக் கற்பிப்பதோடு, அவர்கள் நடத்தும் ஆராய்ச்சிகட்கு வழி காட்டியாகவும், மேற்பார்வையாளராகவும் பணியாற்றி வருகின்றனர்.

இப்பாடப் புத்தகங்களை எழுதுங்கால் ஆசிரியருக்குப் பெருந்துணை செய்தவர் தமிழ் வித்துவான் திருமதி. முத்து லட்சுமி அம்மையார் ஆவர். அவர்கட்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

புதிய பாடத் திட்டத்தை ஒட்டி அனுபவம் நிறைந்த ஆசிரியர்களால் எழுதப்பட்ட இப்பாடப் புத்தகங்கள் குழந்தைகளுக்குச் சிறந்த முறையில் பயன்படும் என எதிர்பார்க்கின்றோம்.

வேங்கடராமா கம்பெனியார்

# இரண்டாம் புத்தகம்

## பொருள் அடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | கணபதி | ... | 6 |
| 2. | கணபதியின் குடும்பம் | ... | 7 |
| 3. | என் வீடு | ... | 8 |
| 4. | பள்ளிக்கூடம் | ... | 10 |
| 5. | ஔவைப் பாட்டி | ... | 12 |
| 6. | ஔவை | ... | 14 |
| 7. | எறும்பும் புறுவும் | ... | 15 |
| 8. | உன் ஊர் | ... | 17 |
| 9. | கோழி | ... | 19 |
| 10. | தொழிலாளிகள் | ... | 20 |
| 11. | சிவகாமி நல்ல பெண் | ... | 22 |
| 12. | ஆளுக்குப் பாதி | ... | 24 |
| 13. | தீபாவளிப் பண்டிகை | ... | 26 |
| 14. | தீபாவளி | ... | 28 |
| 15. | நாய் | ... | 29 |
| 16. | என் தங்கையின் பிறந்த நாள் | ... | 31 |
| 17. | காந்தித் தாத்தா | ... | 33 |
| 18. | சீதையின் திருமணம் | ... | 36 |
| 19. | இரயில் | ... | 38 |
| 20. | எங்கள் தோட்டம் | ... | 39 |
| 21. | ஏமாந்த திருடர்கள் | ... | 41 |
| 22. | நாட்கள்-மாதங்கள் | ... | 44 |
| 23. | ஆடை | ... | 47 |
| 24. | சின்னப் பொம்மை | ... | 49 |
| 25. | கிறிஸ்துமஸ் பண்டிகை | ... | 50 |
| 26. | அளந்து பார்த்தல் | ... | 53 |
| 27. | யார் நல்லவர் ? | ... | 56 |
| 28. | பசுவும் கன்றும் | ... | 58 |
| 29. | ஒற்றுமையின் உயர்வு | ... | 59 |
| 30. | நிழலுக்கும் வாடகையா ? | ... | 62 |
| 31. | பொங்கலோ பொங்கல் ! | ... | 65 |
| 32. | பொங்கல் | ... | 67 |
| 33. | உண்மைக்குப் பரிசு | ... | 68 |


### செய்யுள்


| | | | |
|---|---|---|---|
| 1. | கொன்றை வேந்தன் | ... | 72 |
| 2. | உலக நீதி | ... | 74 |

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கல தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ! ஜயஹே ! ஜயஹே !
ஜய ஜய ஜய ஜயஹே !

# நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்து
கிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன;

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

**வெற்றி! வெற்றி! வெற்றி!**



மேலே உள்ள படங்களைப் பார். ஒவ்வொரு படத்தைப் பற்றியும் ஒவ்வொரு வாக்கியம் சொல்.

**உதாரணம் :** படம் 1. உழவன் வயலை உழுகிறான்.




மேலே உள்ள படங்களைப் பார். ஒவ்வொரு பொருளின் உபயோகத்தைக் கூறு.




மேலே உள்ள படங்களைப் பார். ஒவ்வொரு படத்தைப் பற்றியும் இரண்டு வாக்கியங்கள் சொல்.

ஆசிரியருக்கு: குழந்தைகள் சொல்லுவதற்கு முன்னால் ஆசிரியர் ஒரு படத்தைக் காட்டி உதாரணமாக இரண்டு வாக்கியங்கள் கூறலாம்.

## பயிற்சி

| | | |
|---|---|---|
| அண்ணன் | இருக்கும் | ஏறினுள் |
| அறை | உதிக்கும் | ஒழுங்கு |
| அதிகம் | உண்டு | ஓடினுன் |
| அழகான | உரல் | கடிக்கும் |
| ஆசிரியர் | ஊற்று | சனி |
| ஆசை | ஊக்கம் | தண்ணீர் |
| ஆடும் | ஊர் | நன்ருக |
| இறகு | எல்லோரும் | பறக்கும் |
| இலை | எருது | மரம் |

மேலே உள்ள வார்த்தைகளைப் படி. ஒவ்வொரு வார்த்தையையும் உபயோகித்து ஒரு வாக்கியம் சொல்.

ஆசிரியருக்கு :

குழந்தைகள் சொல்லுவதற்கு முன்பு ஆசிரியர் சில உதாரணங்கள் கொடுப்பது நலம்.

## பயிற்சி

முதற் புத்தகத்தில் உபயோகப்படுத்தப்பட்டுள்ள வார்த்தைகளை முப்பத்தைந்து அல்லது நாற்பது பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு, ஒவ்வொரு பகுதியையும் ஓர் அட்டையில் எழுதி, ஒவ்வொரு குழந்தையிடமும் ஓர் அட்டையைக் கொடுத்து, அட்டையிலுள்ள வார்த்தைகளை அமைத்து ஒவ்வொரு வார்த்தைக்கும் ஒன்று அல்லது இரண்டு வாக்கியங்கள் சொல்லச் செய்க; பின்பு எழுதச் செய்க.

குழந்தைகளிடம் அட்டைகளை மாற்றிக் கொடுத்து, வாக்கியங்கள் சொல்லவும் எழுதவும் செய்யலாம். ஒவ்வோர் அட்டையிலும் பத்து வார்த்தைகள் வீதம் இருப்பது நலம்.



# 1. கணபதி

கணபதி பள்ளிக்கூடத்தில் படிக்கிறான்.

அவனுக்கு ஆறு வயது.

அவன் இரண்டாவது வகுப்பில் படிக்கிறான்.

அவனுடைய வகுப்பில் நாற்பது பிள்ளைகள் படிக்கிறார்கள்.

அவனிடம் ஒரு புத்தகமும், ஒரு சிலேட்டும், மூன்று நோட்டுகளும் இருக்கின்றன.

**வயது** **நாற்பது** **இருக்கின்றன**



## 2. கணபதியின் குடும்பம்

கணபதியின் தந்தையின் பெயர் ஆறுமுகம்.
அவனுடைய தாயாரின் பெயர் வள்ளியம்மை.
அவனுக்கு ஓர் அண்ணன் இருக்கிருன்.
அவன் பெயர் சங்கரன்.
அவனுக்கு ஒரு தங்கையும் உண்டு.
அவள் பெயர் கோமதி.
அவனுடைய பாட்டி நல்ல கதைகள் கூறுவாள்.
அவனுடைய தாத்தா அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பார்.

**அண்ணன்** **தங்கை** **குடும்பம்**




# 3. என் வீடு

என் வீடு ஒரு சிறிய வீடு. அது மாடி வீடு அல்ல. அதில் நான்கு அறைகள் உண்டு. என் வீட்டில் ஐந்து சன்னல்களும் நான்கு கதவுகளும் இருக்கின்றன. வீட்டிற்கு முன்புறம் ஒரு சிறிய முற்றம் இருக்கிறது. வீட்டிற்குப் பின்னால் ஓர் அழகிய தோட்டம் இருக்கிறது.

சமையலறையில் சமையல் செய்வதற்கு வேண்டிய பாத்திரங்கள் இருக்கின்றன. படுக்கை அறையில் மெத்தை, பாய்,

தலையணை, போர்வை முதலியவைகள் இருக்கின்றன. மற்றோர் அறையில் அரிசி, பருப்பு, உளுந்து, மிளகாய்வற்றல், கொத்த மல்லி முதலிய சாப்பாட்டுக்கு வேண்டிய பொருள்கள் மூட்டைகளிலும், பாத்திரங் களிலும் வைக்கப்பட்டிருக்கின்றன.

ஓர் அறையில் நல்ல அழகான படங்கள் மாட்டப்பட்டிருக்கின்றன. அந்த அறையில் நான்கு நாற்காலிகளும், ஒரு மேசையும் போடப்பட்டிருக்கின்றன. நாங்கள் அந்த அறையில் உட்கார்ந்து பாடங்களைப் படிப் போம்.

வீட்டுக்குப் பின்புறம் தோட்டம் இருக் கிறது. அங்கே இரண்டு வாழை மரங் களும், அவரைக்கொடிகளும் இருக்கின்றன. தோட்டத்தில் ஒரு முருங்கை மரமும் உண்டு.

| | | |
|---|---|---|
| மெத்தை | தலையணை | போர்வை |
| கொத்தமல்லி | முற்றம் | நாள்தோறும் |

பயிற்சி

1. வீட்டில் எத்தனை அறைகள் இருக்கின்றன ?
2. உனக்குத் தெரிந்த நான்கு செடிகளின் பெயர்களை எழுது.



# 4. பள்ளிக்கூடம்

எங்கள் பள்ளிக்கூடத்தில் ஐந்து வகுப்புகள் இருக்கின்றன. மொத்தம் நூற்று இருபது பிள்ளைகள் படிக்கின்றனர். என் வகுப்பில் முப்பத்தைந்து பிள்ளைகள் படிக்கின்றனர். அவர்களில் பதின்மூன்று பேர் பெண்கள்.

எங்கள் பள்ளி காலையில் பத்து மணிக்குத் தொடங்கும். முதல் மணி அடித்தவுடன் நாங்கள் விளையாடும் இடத்திற்குச் செல்லுவோம். அங்கே அணிஅணியாக நிற்போம். இரண்டாவது மணி அடித்த

வுடன் எல்லோரும் கடவுள் வாழ்த்துப் பாடுவோம்.

பின்பு நாங்கள் ஒழுங்காக எங்கள் வகுப்புக்குச் செல்லுவோம் ; தமிழ், கணக்கு, கதை, பாட்டு, இயற்கை ஆகிய பாடங்களைப் படிப்போம். மாலையில் நாலரை மணிக்குப் பள்ளி முடியும். சிலர் விளையாடுவார்கள். சிலர் தோட்டவேலை செய்வார்கள். எங்கள் பள்ளிக்கூடத்தில் உள்ள தோட்டம் அழகானது.

எங்கள் பள்ளியில் மூன்று ஆசிரியர்களும், இரண்டு ஆசிரியைகளும் உண்டு. அவர்கள் நல்லவர்கள் ; அன்பாக இருப்பார்கள். நாங்கள் எல்லோரும் நன்ருகப் படிக்கிரும்.

அணிஅணியாக வாழ்த்து இயற்கை

### பயிற்சி

1. உன் வகுப்புச் சுவர்களில் மாட்டப்பட்டிருக்கின்ற படங்களின் பெயர்களைக் கூறு.

2. மாலையில் மணி அடித்ததும் சிறுவர்கள் என்ன செய்வார்கள் ?

3. உங்கள் பள்ளியில் மொத்தம் எத்தனை ஆசிரியர்கள் ?



## 5. ஔவைப் பாட்டி

ஔவைப் பாட்டி நம் பாட்டி. அவள் நல்ல தமிழ்ப் பாட்டுக்களைப் பாடியிருக்கிருள்; நல்ல நீதிகளைக் கூறியிருக்கிருள்; பாட்டுக்கள் பாடிக்கொண்டே பல ஊர்களுக்குப் போனுள்; அரண்மனைகளில் பாடினுள்; ஏழைகளின் வீடுகளிலும் பாடினுள்.

ஒருநாள் அதிக தூரம் நடந்ததால் அவள் களைத்துப்போனுள்; வழியில் ஒரு கோவிலைக் கண்டாள்; களைப்பாற

விரும்பினாள். கோவிலில் அவள் காலை நீட்டிப் படுத்துத் தூங்கினாள்.

கோவில் பூசாரி வந்தான்; சுவாமிக்கு நேராகக் காலை நீட்டி ஔவை படுத்திருப்பதைப் பார்த்தான். அவனுக்குக் கோபம் வந்தது. அவன் ஔவையை எழுப்பினான்; "என்ன பாட்டி! சுவாமிக்கு நேராகக் காலை நீட்டிப் படுத்திருக்கிறாயே, உனக்குக் கண் இல்லையா?" என்று கேட்டான். ஔவை, "ஐயா! தயவு செய்து கடவுள் இல்லாத இடத்தைக் காட்டுங்கள். நான் அப்பக்கமாகக் காலை நீட்டிக் கொள்ளுகிறேன்" என்றாள். பூசாரி வெட்கமடைந்தான்; கடவுள் எங்கும் இருக்கிறார் என்று தெரிந்து கொண்டான்; ஔவைப் பாட்டியிடம் மன்னிப்புக் கேட்டான்.

கடவுள் எங்கும் இருக்கிறார்.

| | | |
|---|---|---|
| அரண்மனை | களைப்பாற | மன்னிப்பு |
| பூசாரி | வெட்கம் | நேராக |

பயிற்சி

1. பூசாரி கோபம் கொண்டது ஏன்?
2. ஔவை பூசாரியிடம் சொன்ன பதில் என்ன?
3. எதிர் மொழிகளைக் கூறு.

பல ஏழை நீதி



## 6. ஔவை

ஔவைக் கிழவி நம் கிழவி,
அமுதின் இனிய சொற்கிழவி,
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங் கிழவி.

கூழுக்காகக் கவிபாடும்
கூனக் கிழவி ; அவளுரையை
வாழும் வாழ்வில் ஒரு நாளும்
மறவோம் மறவோம் மறவோமே!

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை.


செந்தமிழ் நாடு
செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. (செந்தமிழ்)



## 7. எறும்பும் புருவும்

ஒரு குளக்கரையில் ஒரு பெரிய மரம் இருந்தது. மரத்தின் கிளையில் ஒரு புரு கூடு கட்டி வசித்து வந்தது. மரத்துக்கு அடியில் ஓர் எறும்புப் புற்று இருந்தது. ஒரு நாள் குளத்தின் கரையில் ஓர் எறும்பு இரை தேடிக் கொண்டிருந்தது. அதிகக் காற்று அடித்தது. குளத்தில் அலைகள் ஏற்பட்டன. அலைகள் கரையில் மோதின. எறும்பு அலையில் அகப்பட்டுத் தண்ணீரில் மிதந்தது.

மரத்தின் மேலிருந்த புரு எறும்பைப் பார்த்தது; அதற்கு உதவி செய்ய நினைத்தது;

ஓர் இலையைப் பறித்து நீரில் போட்டது. எறும்பு இலையின் மீது ஏறிக் கொண்டது. காற்றினால் இலை அசைந்து அசைந்து கரைக்கு வந்தது. எறும்பு கரையில் ஏறிற்று; புறாவுக்கு நன்றி கூறிற்று.

மற்றொரு நாள் ஒரு வேடன் அங்கு வந்தான்; மரத்தின் மீது புறாவைப் பார்த்தான்; வில்லை எடுத்தான்; புறாவை அடிக்கக் குறிபார்த்தான். வேடனை எறும்பு பார்த்தது; புறாவைக் காப்பாற்ற எண்ணியது. உடனே அது அவனுடைய காலைச் 'சுறுக்'கென்று கடித்தது. வேடனின் குறி தவறிற்று. அம்பு மரக் கிளையில் பட்டது. புறா பறந்து சென்றது.

**நன்றி மறக்கக் கூடாது.**

| | | |
|---|---|---|
| புற்று | அலைகள் | மோதின |
| பறித்து | நன்றி | குறி |

**பயிற்சி**

1. எறும்பு எங்கே வசித்தது?
2. இலையைப் பறித்துத் தண்ணீரில் போட்டது எது?
3. வேடனின் குறி ஏன் தவறிற்று?



# 8. என் ஊர்

என் ஊர் திருநெல்வேலி. என் ஊரில் தாமிர பரணி ஆறு ஓடுகிறது. ஊரைச் சுற்றி நெல் வயல்கள் இருக்கின்றன. நெல் வயல்கள் வேலி போல் இருக்கின்றன. வயல்களில் நெல் விளைகிறது. சில வயல்களில் கரும்பும் விளையும்.

என் ஊரில் அநேக குளங்கள் இருக்கின்றன. இரண்டு பெரிய வாய்க்கால்களும் இருக்கின்றன.

என் ஊரின் நடுவில் ஒரு பெரிய கோவில் இருக்கிறது. அது நெல்லையப்பர் கோவில். ஆண்டுதோறும் இரண்டு பெரிய திரு விழாக்கள் அங்கே நடக்கும். ஆனி மாதம் தேர்த்திருவிழா நடக்கும். ஐப்பசி மாதம் திருக் கல்யாணத் திருவிழா நடக்கும். இரண்டு விழாக்களுக்கும் பக்கத்து ஊர்களிலிருந்து மக்கள் கூட்டங் கூட்டமாக வருவார்கள்.

திருநெல்வேலிக்கு மேற்கே குற்றால மலை உள்ளது. என் ஊரிலிருந்து குற்றால மலை நாற்பது மைல் தூரத்தில் இருக்கிறது. என் ஊருக்குக் கிழக்கே திருச்செந்தூர் உள்ளது. திருச்செந்தூர்க் கடற்கரையில் முருகன் கோவில் இருக்கிறது. என் ஊருக்குத் தெற்கே ஐம்பது மைல் தூரத்தில் கன்னியா குமரி இருக்கிறது.

| | | |
|---|---|---|
| தாமிரபரணி | ஆண்டுதோறும் | திருவிழா |
| கூட்டங் கூட்டமாக | கடற்கரை | வேலி |

**பயிற்சி**

கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. திருநெல்வேலியில் —— ஆறு ஓடுகிறது.
2. ஊரின் நடுவில் இருப்பது —— கோவில்.
3. —— மாதம் திருக்கல்யாணத் திருவிழா.



## 9. கோழி

கோழீ! கோழீ! வா வா;
கொக்கோ கோ என்று வா;
கோழீ! ஓடி வா வா;
கொண்டைப் பூவைக் காட்டு வா.

கோழீ! கோழீ! வா வா;
கூரைவிட்டு இறங்கிவா;
கோழீ! முட்டை இட வா;
கூட்டில் அடை காக்க வா.

பெட்டைக் கோழீ! வா வா;
பிள்ளைகளைக் கூட்டி வா;
குட்டை நெல்லைக் கொட்டினேன்;
கொத்திக் கொத்தித் தின்ன வா.

—கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளை.

# 10. தொழிலாளிகள்

உழவர் பயிர்த் தொழில் செய்பவர். அவர்கள் ஏர் கொண்டு வயலை உழுவார்கள்; விதை விதைப்பார்கள்; நாற்று நடுவார்கள்; தண்ணீர் பாய்ச்சுவார்கள்; களை எடுப்பார்கள்; அறுவடை செய்வார்கள். அவர்கள் நன்ருக உழைப்பவர்கள். நெல்லையும் வேறு தானியங்களையும் அவர்கள் நமக்குப் பயிர் செய்து கொடுப்பார்கள்.



குயவர் மண்பாண்டம் செய்பவர்; நல்ல மண் எடுப்பார்கள்; அதில் உள்ள கற்களையும் குச்சிகளையும் நீக்குவார்கள்; மண்ணை நன்ருகப் பிசைவார்கள். சட்டி, குடம், பானை முதலிய மண்பாண்டங்களை அவர்கள் செய்வார்கள். மண் பாண்டங்கள் சமையல் செய்ய உதவும்.



தச்சர் மரவேலை செய்பவர்; மரத்தை அறுத்து மரச் சாமான்கள் செய்கிருர்கள்; உழவர்களுக்கு வேண்டிய மரச்சாமான்களைச் செய்து கொடுக்கிருர்கள்; வீடுகளுக்கு

வேண்டிய சன்னல்களையும், கதவுகளையும் செய்வார்கள். பெட்டி, நாற்காலி, மேசை முதலிய சாமான்களையும் செய்பவர்கள் தச்சர்களே.





அழகான பொன் நகைகள் செய்பவர் தட்டார். அவர்கள் வெள்ளிப் பாத்திரங்களும், வெள்ளி நகைகளும் செய்வார்கள்.

ஒவ்வொருவருடைய தொழிலும் மற்றவருக்கு அவசியம். உழவையும் தொழிலையும் போற்றுவோம்.

| | | |
|---|---|---|
| நாற்று | பாய்ச்சு | அறுவடை |
| பிசை | மண்பாண்டங்கள் | மரச்சாமான்கள் |

### பயிற்சி

1. உழவர்கள் செய்யும் தொழில்களைக் கூறு.
2. உன் வகுப்பிலுள்ள மரச்சாமான்களின் பெயர்களைக் கூறு.
3. உனக்குத் தெரிந்த பொன் நகைகளின் பெயர்களைக் கூறு.



## 11. சிவகாமி நல்ல பெண்

சிவகாமி நல்ல பெண். அவள் நன்ருகப் படிப்பாள்; வீட்டில் தாயாருடன் பல வேலைகளைச் செய்வாள்.

காலை எழுந்தவுடன் அவள் படுக்கைகளை அழகாக அடுக்கி வைப்பாள்; முற்றத்தில் நீர் தெளிப்பாள்; நன்ருகப் பெருக்குவாள்; அழகான சிறு கோலங்கள் போடுவாள்.

பின்பு அவள் குளிப்பாள்; பள்ளிப் பாடங்களைப் படிப்பாள்; காலை உணவு சாப் பிட்டுப் பள்ளிக்குப் போவாள். அவளுடைய

சாப்பாட்டுத் தட்டுக்களை அவளே கழுவி வைப்பாள்.

மாலையில் குழந்தைகளுடன் அவள் நன்ருக விளையாடுவாள். கோலாட்டம் ஆடுவதில் அவளுக்கு விருப்பம். விளையாட்டு முடிந்ததும் அவள் கைகால் சுத்தம் செய்வாள்; வீட்டில் விளக்குகளைத் துடைத்து ஏற்றுவாள். விளக்கு முன் உட்கார்ந்து பாடங்களைப் படிப்பாள்.

அவள் எப்பொழுதும் சுத்தமாக இருப்பாள்; சுறுசுறுப்பாகவும் இருப்பாள்; மற்றப் பிள்ளைகளுடன் அன்பாக இருப்பாள்; தன் தங்கைக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுப்பாள்.

| | | |
|---|---|---|
| தெளிப்பாள் | பெருக்குவாள் | முற்றம் |
| எப்பொழுதும் | துடைத்து | சுறுசுறுப்பு |

**பயிற்சி**

1. காலையில் எழுந்தவுடன் சிவகாமி செய்யும் வேலைகள் யாவை?
2. சிவகாமிக்கு விருப்பமான விளையாட்டு எது?
3. உனக்கு விருப்பமான விளையாட்டு எது?



# 12. ஆளுக்குப் பாதி

அக்பர் சிறந்த மன்னர். அவர் எல்லோரிடமும் அன்பாய் இருந்தார். ஒரு நாள் பீர்பால் என்பவர் அவரைப் பார்க்க வந்தார்.

அரண்மனை வாயிலில் இரண்டு வேலைக்காரர்கள் இருந்தனர். அவர்கள் பீர்பாலை உள்ளே விட மறுத்தனர். "என்னை உள்ளே போக விடுங்கள். மன்னர் எனக்குப் பரிசுகள் கொடுப்பார். பரிசுகளை நான் வைத்துக் கொள்ளமாட்டேன். எனக்குக் கிடைக்கும் பரிசைப் பங்கிட்டு உங்கள்

இருவருக்கும் ஆளுக்குப் பாதி கொடுக்கிறேன்" என்று பீர்பால் வேலைக்காரர்களிடம் சொன்னார். வேலைக்காரர் ஒப்புக்கொண்டனர். அவரை உள்ளே போகவிட்டனர்.

பீர்பால் மன்னரைப் பார்த்தார்; நன்றாகப் பேசினார். அக்பர் பீர்பாலைப் புகழ்ந்தார். "என்ன பரிசு வேண்டும்?" என்று மன்னர் பீர்பாலைக் கேட்டார். "பிரம்பினால் நூறு அடிகள் பரிசாகக் கொடுங்கள்" என்று பீர்பால் கேட்டார்.

மன்னர் ஆச்சரியப்பட்டார்; "உண்மையாக நூறு அடி வேண்டுமா?" என்றார். பீர்பால், "ஆம்; ஐயா! நூறு அடிகள் பரிசாக வேண்டும்" என்றார்.

பீர்பாலுக்குப் பிரம்படி கொடுக்க மன்னர் வேலைக்காரர்களைக் கூப்பிட்டார். தனக்குக் கொடுப்பதை இரண்டு வேலைக்காரர்களுக்கும் ஆளுக்குப் பாதி பாதியாகக் கொடுக்க வேண்டும் என்று பீர்பால் மன்னரிடம் கூறினார்; தான் வேலைக்காரர்களிடம் பேசிக் கொண்டதை மன்னருக்குத் தெரிவித்தார். வேலைக்காரர் இருவருக்கும் ஆளுக்கு ஐம்பது அடிகள் கொடுக்கப் பட்டன.





## 13. தீபாவளிப் பண்டிகை

தீபாவளி இந்துக்களின் பண்டிகைகளில் ஒன்று. தீபாவளி ஐப்பசி மாதத்தில் கொண்டாடப் படுகிறது. தீபாவளியன்று பலர் எண்ணெய் தேய்த்துக் குளிப்பார்கள்; புதிய ஆடைகளை அணிவார்கள். அன்று பல தின்பண்டங்கள் குழந்தைகளுக்குக் கிடைக்கும். குழந்தைகள் தீபாவளிக்கு வெடி, மத்தாப்பு வாங்குவார்கள்; அவைகளைக் கொளுத்துவார்கள்.

வெடிகளைக் கொளுத்தும் பொழுது நாம் கவனமாக இருக்க வேண்டும். சில

வேளைகளில் வெடியைக் கொளுத்தும்பொழுது ஆபத்துக்கள் ஏற்படுவது உண்டு. வெடி, மத்தாப்பு முதலியவைகளால் ஏற்பட்ட ஆபத்துக்களில் சிலர் இறந்துபோயுள்ளனர். கவனம் இல்லாமல் வெடி, மத்தாப்புக்களைக் கொளுத்தக் கூடாது.

தீபாவளிக்குச் சிலர் வெடி, மத்தாப்பு வாங்குவதில்லை. தீபாவளியன்று பலர் வீடுகளில் விளக்குகளை ஏற்றி வரிசையாக வைப்பார்கள்.

இந்த ஆண்டு தீபாவளியன்று எனக்கு ஒரு நல்ல கால்சட்டையும், பட்டுச்சட்டையும் கிடைத்தன. நான் வெடிகள் வாங்கவில்லை; அழகிய படங்கள் கொண்ட சில புத்தகங்கள் வாங்கினேன். எனது தங்கைக்குத் தீபாவளியன்று பட்டுப் பாவாடையும், சட்டையும் கிடைத்தன.

| | | |
|---|---|---|
| பண்டிகை | தேய்த்து | கவனம் |
| ஆபத்துக்கள் | வரிசையாக | மத்தாப்பு |

**பயிற்சி**

1. தீபாவளியை எந்த மாதத்தில் கொண்டாடுகிறார்கள்?

2. உங்கள் வீட்டில் கொண்டாடும் பண்டிகைகளின் பெயர்களைக் கூறு.

# 14. தீபாவளி

காலைக் கோழி கூவும் முன்னே
கண்ணை விழித்துக் கொள்ளலாம் ;
எண்ணெய் தேய்த்து முழுகலாம்.

பட்டணத்தில் வாங்கிவந்த
பட்டு ஆடை எடுக்கலாம் ;
கட்டிப் பார்த்து மகிழலாம்.

பட்சமான அப்பாவிடம்,
பட்டாஸ் கட்டு வாங்கலாம் ;
சுட்டுச் சுட்டுத் தீர்க்கலாம்.

தருவாள் அம்மா, பட்சணங்கள் ;
தட்டு நிறைய வாங்கலாம் ;
பிட்டுப் பிட்டுப் போடலாம்.

—அழ. வள்ளியப்பா



## 15. நாய்

நாய் வீட்டைக் காக்கும். நாய் நன்றி யுள்ள மிருகம்; தெரிந்தவர்களைக் கண்டால் வாலை ஆட்டும்; தெரியாதவர்களைக் கண்டால் 'ளொள்' 'ளொள்' என்று குரைக்கும்.

இராமன் வீட்டில் ஒரு நாய் இருந்தது. அது நல்ல நாய். இராமன் அதை அன்பாக வளர்த்தான்; நாள் தோறும் அதற்குப் பாலும் சோறும் கொடுப்பான்.

ஒரு நாள் இராமனும் அவன் பெற்றோர் களும் பக்கத்து ஊரில் திருவிழா பார்க்கப்

போனார்கள்; வீட்டைப் பூட்டிச் சென்றார்கள்; வீட்டின் முன்னால் நாயை விட்டுவிட்டுச் சென்றார்கள். வீட்டைக் காக்க நாயை வீட்டில் விட்டுப் போவது அவர்களுடைய வழக்கம்.

இரவு பத்து மணி வரை இராமனும், அவன் பெற்றோர்களும் திரும்பவில்லை. நாய் முற்றத்தில் படுத்துக் காவல்காத்துக் கொண்டிருந்தது.

வீட்டினுள் ஆள் நடக்கும் சத்தம் கேட்டது. நாய் வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தது; 'ளொள்' 'ளொள்' என்று குரைத்தது. பின் பக்கமாக வீட்டுக்குள் புகுந்த திருடன் பயந்து விட்டான்; சுவர் ஏறிக் குதித்து ஓட ஆரம்பித்தான். நாய் அவனை விரட்டியது; ஓடிச் சென்று அவன் இடது காலைக் கடித்தது. திருடனால் ஓட முடியவில்லை. பக்கத்து வீட்டுக்காரர் ஓடி வந்து அவனைப் பிடித்துக் கொண்டனர்.

நாயிடம் அன்பாய் இரு.

காக்கும் குரைக்கும் வழக்கம்

**பயிற்சி**

நாள் தோறும் இராமன் நாய்க்குக் கொடுக்கும் உணவு யாது?



## 16. என் தங்கையின் பிறந்த நாள்

நேற்று என் தங்கையின் பிறந்த நாள். நாங்கள் அதைக் கொண்டாடினேம். என் தங்கையின் பெயர் கமலம். அவளுக்கு மூன்று வயது முடிந்தது.

என் தங்கைக்குப் புதிய பாவாடையும், சட்டையும் பரிசாகக் கிடைத்தன. அவைகளை என் மாமா வாங்கிக் கொடுத்தார். பாவாடை சிவப்பு நிறம். சட்டை நீல நிறம்.

என் பாட்டி இரண்டு வளையல்களை என் தங்கைக்குப் பரிசாகக் கொடுத்தாள்.

வளையல்கள் தங்க வளையல்கள்; எங்கள் ஊர் தட்டார் செய்தவை.

என் தங்கையின் பிறந்த நாளைக் கொண்டாட நேற்று மாலை எங்கள் வீட்டில் ஒரு விருந்து நடந்தது. விருந்துக்குப் பக்கத்து வீட்டுக் குழந்தைகள் எல்லோரும் வந்திருந்தனர். லட்டு, ஓமப்பொடி, வடை, காப்பி இவற்றை விருந்தினர்களுக்கு நாங்கள் கொடுத்தோம். எனக்கு இரண்டு லட்டுகள் கிடைத்தன. எல்லோரும் மகிழ்ச்சியாக உண்டோம். பின்பு எல்லோரும் கூடி விளையாடினோம்.

| | | |
|---|---|---|
| கொண்டாடினோம் | மகிழ்ச்சி | விருந்து |
| விருந்தினர்கள் | முடிந்தது | கூடிவிளையாடு |

### பயிற்சி

1. கமலத்துக்குப் பரிசுகளாகக் கிடைத்தவை யாவை?
2. பரிசு கொடுத்தவர்கள் யாவர்?
3. விருந்தில் குழந்தைகளுக்கு என்னென்ன கொடுத்தார்கள்?

# பாப்பாப் பாட்டு

ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்
நீதி உயர்ந்த மதி கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்.

—பாரதியார்





## 17. காந்தித் தாத்தா

காந்தித் தாத்தா குழந்தைகளிடம் மிகுந்த அன்புடையவர். அவர் எல்லோ ரிடமும் அன்பாயிருந்தார். அவர் போர்பந்தர் என்னும் ஊரில் பிறந்தார்; இங்கிலாந்தில் வக்கீல் வேலைக்குப் படித்தார்; தென் ஆப்பிரிக்காவில் சிறிது காலம் வக்கீல் வேலை பார்த்தார். அங்கு ஏழை இந்தியர்களுக்காக அவர் மிகவும் பாடுபட்டார். பின்பு தனது தாய் நாட்டுக்குத் திரும்பினர்; வக்கீல்

தொழிலை விட்டுவிட்டு நம் நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டார்.

காந்தி ஏழைகளிடம் இரக்கம் உடையவர். தாழ்த்தப்பட்டவர்களை உயர்த்தப் பாடு பட்டார்.

அவருக்குக் கடவுளிடம் மிகுந்த பக்தி உண்டு. எல்லா மதத்தினரும் ஒற்றுமையாக வாழவேண்டும் என்று அவர் கூறினர்; சாதிச் சண்டை, மதச் சண்டைகளை வெறுத்தார்; உண்மையே வெற்றி தரும் என்று எப்பொழுதும் எண்ணினர்.

சிறு பிள்ளையாக இருக்கும்பொழுது, ஒரு நாள் காந்தி அரிச்சந்திர நாடகம் பார்த்தார்; "உண்மையே சொல்ல வேண்டும்; பொய் சொல்லக் கூடாது," என்று நினைத்து வாழ்ந்த அரிச்சந்திரன் பட்ட துன்பங்களைக் கண்டார். கடைசியில் அரிச்சந்திரனுக்குக் கிடைத்த வெற்றியையும் நாடகத்தில் பார்த்தார்.

அரிச்சந்திரன் கதை அவர் மனத்தில் நன்ருகப் பதிந்துவிட்டது. உண்மையே பேச வேண்டும் என்று அவர் முடிவு செய்தார்; எப்பொழுதும் உண்மையையே பேசினர்.

காந்தி நம் சுதந்திர இந்தியாவின் தந்தை. அவரை நாம் போற்றுவோம்; அவர் வழியைப் பின்பற்றுவோம்.

காந்தித் தாத்தா நம் தாத்தா.
கருணை மிக்க பெருந் தாத்தா.
சாந்தமூர்த்தி என்றென்றும்
சத்திய மூர்த்தி நம் தாத்தா.

அழ. வள்ளியப்பா

| | | |
|---|---|---|
| பாடுபட்டார் | விடுதலை | வக்கீல் |
| இரக்கம் | மதம் | பக்தி |
| வெற்றி | சுதந்திரம் | பின்பற்றுவோம் |

**பயிற்சி**

1. காந்தி பிறந்த ஊரின் பெயரைக் கூறு.
2. அரிச்சந்திரன் நாடகம் பார்த்த காந்தி என்ன முடிவு செய்தார்?
3. அரிச்சந்திரன் கதையை ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்து கொள்.



## 18. சீதையின் திருமணம்

தசரதர் ஒரு பெரிய மன்னர். அவருக்கு இராமன், இலக்குமணன், பரதன், சத்துருக்கனன் என நான்கு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் வில்வித்தையில் சிறந்தவர்கள்.

ஒரு நாள் விசுவாமித்திரர் என்ற பெரிய முனிவர் தசரதர் அரண்மனைக்கு வந்தார். தசரதர் அவரை வரவேற்றார். தன் தவத்திற்கு உதவி செய்ய இராமனைக் காட்டுக்கு அனுப்ப வேண்டும் என்று கேட்டார். தசரதர் எண்ணிப் பார்த்தார். இராமனையும் இலக்குமணனையும் காட்டுக்கு அனுப்ப ஒப்புக் கொண்டார்.

விசுவாமித்திரர் இராமனையும் இலக்குமணனையும் காட்டுக்கு அழைத்துச் சென்றார்; அவர்களுக்குப் பல புதிய வித்தைகளைச் சொல்லிக் கொடுத்தார்; தவம் செய்து முடிந்த பின்பு மிதிலைக்கு அவர்களை அழைத்துச் சென்றார்.

மிதிலையில் ஜனகர் என்ற மன்னர் இருந்தார். அவர் மகள் சீதை. ஜனகர் சீதைக்குத் திருமணம் செய்ய ஏற்பாடுகள் செய்தார். ஜனகரிடம் ஒரு பெரிய வில் இருந்தது. அந்த வில்லை யார் வளைக்கிறார்களோ அவர்களுக்குச் சீதையை மணம் செய்து கொடுப்பதாக ஜனகர் கூறினார்.

மன்னர்கள் பலர் முயற்சி செய்தனர். அவர்களால் வில்லை அசைக்கவும் முடியவில்லை. வேறு சில மன்னர் வில்லைத் தூக்கினர்; வளைக்கமுடியவில்லை. இராமன் வில்லை எடுத்தான்; வளைத்தான். வளைக்கும் போது வில் ஒடிந்தது.

இராமருக்கும் சீதைக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.

| | | |
|---|---|---|
| வில்வித்தை | தவம் | ஒப்புக்கொண்டார் |
| ஏற்பாடுகள் | வளைக்க | சிறப்பாக |




# 19. இரயில்

போகுது பார், ரயில் போகுது பார்.
புகையினைக் கக்கியே போகுது பார்.
'குபு குபு' சத்தம் போடுது பார்.
'கூக் கூக்' என்றுமே கூவுது பார்.
அறை அறையான வண்டிகள் பார்
அவற்றிலே மனிதர் செல்வது பார்.
பாலம் கடந்துமே போகுது பார்.
பட பட கட கட என்குது பார்.
பட்டண மாமா கடிதமெல்லாம்
பையிலே தூக்கி வருகுது பார்.

—அழ. வள்ளியப்பா



## 20. எங்கள் தோட்டம்

எங்கள் பள்ளிக்கூடத்தில் ஒரு சிறிய தோட்டம் இருக்கிறது. அந்தத் தோட்டத்தில் ஒரு புளிய மரமும், இரண்டு மா மரங்களும், ஐந்து தென்னை மரங்களும் இருக்கின்றன.

தோட்டத்தின் ஒரு பக்கத்தில் பூச் செடிகள் இருக்கின்றன. ரோஜா, மல்லிகை, கனகாம்பரம், பிச்சி, முல்லைச் செடிகளை அங்கே காணலாம்.

தோட்டத்தின் நடுவில் ஒரு கிணறு இருக்கிறது. கிணற்றுக்குப் பக்கத்தில் சில பாத்திகள் இருக்கின்றன. நாங்கள்

பாத்திகளே அமைத்தோம். ஒவ்வொரு வகுப்புக்கும் ஒவ்வொரு பாத்தி உண்டு.

எங்கள் பாத்தியில் நாங்கள் கத்தரிச் செடி நட்டிருக்கிறோம். ஐந்தாம் வகுப்பு மாணவர்கள் எங்கள் பாத்தியைக் கொத்திப் பயிர் செய்வதற்குப் பக்குவப்படுத்திக் கொடுத்தார்கள். பாத்திகளில் நாங்கள் நல்ல எருப் போட்டோம்; கத்தரிச் செடிகளே ஒழுங்காக நட்டோம்; ஒழுங்காக நீர் பாய்ச்சினோம். இப்பொழுது கத்தரிச் செடி நன்றாக வளர்ந்திருக்கிறது.

ஆண்டு தோறும் நன்றாகப் பயிர் செய்யப் பட்ட பாத்திக்குத் தலைமை ஆசிரியர் ஒரு பரிசு கொடுப்பார். இந்த ஆண்டு எங்கள் வகுப்புக்குப் பரிசு கிடைக்கலாம்.

| | | |
|---|---|---|
| ஒழுங்காக | பாத்திகள் | அமைத்தோம் |
| வளர்ந்திருக்கிறது | பக்குவம் | பரிசு |

**பயிற்சி**

1. உன் பள்ளித் தோட்டத்தில் இருக்கின்ற மரங்களின் பெயர்களைக் கூறு.
2. ஆறு காய்களின் பெயர்களையும், ஆறு பழங்களின் பெயர்களையும் கூறு.
3. உனக்கு விருப்பமான பூக்கள் யாவை?



## 21. ஏமாந்த திருடர்கள்

தெனுலி என்ற ஊரில் இராமன் என்பவன் இருந்தான். அவனைத் தெனுலிராமன் என்று கூறுவார்கள். அவன் சிறந்த அறிவுள்ளவன்.

ஒரு நாள் இரவு இரண்டு திருடர்கள் தெனுலிராமன் வீட்டுத் தோட்டத்தில் மறைந்து இருந்தனர். அவர்களை எப்படியோ தெனுலிராமன் பார்த்து விட்டான்; திருடர்களை ஏமாற்ற ஒரு தந்திரம் செய்தான்.

தெனுலிராமன் தன் மனைவியைக் கூப்பிட்டு, "இவ்வூரில் திருடர்கள் அதிகம்.

நம் வீட்டிலும் அவர்கள் திருடலாம். அதனுல் நகைகளை ஒரு பெட்டியில் வைத்துப் பெட்டியை நாம் கிணற்றில் போட்டு விடலாம். அங்கே அது திருடு போகாது". என்று அவளிடம் சத்தமாகக் கூறினுன். தெனுலிராமன் சொல்லியது திருடர்களுக்குக் கேட்டது.

ஆனுல் தெனுலிராமன் தான் சொல்லியது போலப் பெட்டியில் நகைகளை வைக்க வில்லை; கற்களால் பெட்டியை நிரப்பினுன்; பின்பு பெட்டியைத் தூக்கிக் கிணற்றில் போட்டான்.

பெட்டி கிணற்றில் விழுந்ததைத் திருடர்கள் பார்த்தார்கள்; மெதுவாகக் கிணற்றின் பக்கம் போனுர்கள். கிணற்றில் நீர் நிறைய இருந்தது. "கொஞ்சம் நீரை இறைத்து விட்டுப் பெட்டியை எடுக்கலாம்," என்று ஒருவன் சொன்னுன். திருடர்கள் தண்ணீரை இறைக்கத் தொடங்கினர்.

தெனுலிராமன் திருடர்களுக்குத் தெரியாதபடி தோட்டத்துக்கு வந்தான். திருடர்கள் இறைத்த நீரை அவன் ஒவ்வொரு மரத்துக்கும் பாய்ச்சினுன்.

விடிய ஆரம்பித்தது. சிறிது வெளிச்சம்

வரத் தொடங்கியது. "எல்லா மரங்களுக்கும் தண்ணீர் பாய்ச்சி விட்டேன். தண்ணீர் நன்ருக இறைத்தீர்கள். இறைத்தது போதும்," என்று தெனுலிராமன் கூறினுன். திருடர் திரும்பிப் பார்த்தனர். ஏமாந்த திருடர்கள் ஓட்டம் பிடித்தனர்.

| | | |
|---|---|---|
| மறைந்து | ஏமாற்ற | தந்திரம் |
| நிரப்பினுன் | மெதுவாக | இறைத்தது |

### பயிற்சி

1. தெனுலிராமன் தன் மனைவியிடம் என்ன கூறினுன்?

2. தெனுலிராமன் தன் மனைவியிடம் ஏன் சத்தமாகக் கூறினுன்?

3. திருடர்கள் தண்ணீர் இறைக்கும்பொழுது தெனுலிராமன் என்ன செய்தான்?




| | | | | | |
|---|---|---|---|---|---|
| SUN ஞாயிறு | 30 17 | 2 19 | 9 26 | 16 3 | 23 10 |
| MON திங்கள் | 31 18 | 3 20 | 10 27 | 17 4 | 24 11 |
| TUES செவ்வாய் | ... | 4 21 | 11 28 | 18 5 | 25 12 |
| WED புதன் | ... | 5 22 | 12 29 | 19 6 | 26 13 |
| THU வியாழன் | ... | 6 23 | 13 30 | 20 7 | 27 14 |
| FRI வெள்ளி | ... | 7 24 | 14 1 | 21 8 | 28 15 |
| SAT சனி | 1 18 | 8 25 | 15 2 | 22 9 | 29 16 |

## 22. நாட்கள்—மாதங்கள்

**ஆசிரியர் :** வேலா ! இன்று என்ன கிழமை ?

**வேலன் :** ஐயா ! இன்று புதன் கிழமை.

**ஆசிரியர் :** கோபாலா ! நேற்று என்ன கிழமை ?

**கோபாலன் :** ஐயா ! நேற்று செவ்வாய்க் கிழமை.

**ஆசிரியர் :** சுந்தரம் ! நாளை என்ன கிழமை ?

**சுந்தரம் :** ஐயா ! நாளை வியாழக் கிழமை.

**ஆசிரியர் :** கோமதி ! கிழமைகளின் பெயர்களை வரிசையாகச் சொல்.

**கோமதி :** ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி.

**ஆசிரியர் :** கணபதி ! தீபாவளியை எந்த மாதத்தில் கொண்டாடுகிறோம் ?

**கணபதி :** தீபாவளியை ஐப்பசி மாதத்தில் கொண்டாடுகிறோம்.

**ஆசிரியர் :** முருகன் ! பொங்கல் விழாவை எப்பொழுது கொண்டாடுகிறோம் ?

**முருகன் :** ஐயா! பொங்கல் விழாவைத் தை மாதம் முதல்நாளில் கொண்டாடுகிறோம்.

**ஆசிரியர் :** சுந்தரம் ! தமிழ் மாதங் களின் பெயர்களைச் சொல்.

**சுந்தரம் :** சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி.

**ஆசிரியர் :** காதர் ! சுதந்திர நாளை எப்பொழுது கொண்டாடினோம் ?

**காதர் :** ஐயா! சுதந்திர விழாவை ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் நாள் கொண்டாடினோம்.

**ஆசிரியர் :** மனுவேல்! ஆங்கில மாதங்களின் பெயர்களைக் கூறு.

**மனுவேல் :** ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சு, ஏப்பிரல், மே, ஜுன், ஜுலை, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர்.

கிழமைகள் மாதங்கள் ஆங்கிலம்

**பயிற்சி**

1. கோடிட்ட இடங்களை நிரப்புக :
   (1) வெள்ளிக் கிழமைக்கு அடுத்தது —— கிழமை.
   (2) ஐப்பசிக்கு முந்திய மாதம் ——.
   (3) —— —— —— ஆகிய மாதங்கள் ஏப்பிரலுக்கு முந்தியவை.
2. (1) 'குடியரசு நாளை' எந்த மாதத்தில் கொண்டாடுகிறோம் ?
   (2) கிறிஸ்துமஸ் பண்டிகையை எந்த மாதத்தில் கிறிஸ்துவர்கள் கொண்டாடுகிறார்கள் ?
   (3) முகம்மதியர் கொண்டாடும் பண்டிகைகளில் இரண்டின் பெயரைக் கூறு.

# 23. ஆடை

நாம் உடுத்தும் துணி நூலால் நெய்யப் பட்டது. பஞ்சிலிருந்து நூல் நூற்கிருர்கள். பருத்திச் செடியிலிருந்து பஞ்சு கிடைக் கிறது. பருத்திச் செடியை நம் நாட்டில்தான் முதல் முதலில் பயிர் செய்தார்கள்.

பருத்திச் செடி கரிசல் மண்ணில் நன்ருக வளரும். அதன் பூ மஞ்சள் நிறமாக இருக்கும். பருத்திச் செடியின் காய் வெடித்த பிறகு காயிலிருந்து பருத்தியை எடுக்கிருர்கள். பருத்தியைச் சுத்தம் செய்து கொட்டை நீக்கிப் பஞ்சை எடுக்கிருர்கள். பஞ்சைச் சுத்தம் செய்து நூல் நூற்கிருர்கள். நூலைக் கொண்டு துணி நெய்கிருர்கள்.

ஆட்டின் உரோமத்திலிருந்து கம்பளம் நெய்யப்படுகிறது. உரோமத்தோடு வேறு சில பொருள்களையும் சேர்த்துச் சிலர் கம்பளம் நெய்கிருர்கள். கம்பள ஆடை குளிர் காலத்துக்குத் தகுந்தது. வடநாட்டில் உள்ளவர் குளிர் காலத்தில் கம்பள ஆடைகளை அணிகின்றனர்.

பட்டுப் பூச்சிகளின் கூடுகளிலிருந்து பட்டு நூல் கிடைக்கிறது. பட்டு நூலைக் கொண்டு பட்டாடை நெய்கிறார்கள். பெண்களுக்குப் பட்டின் மேல் அதிகப் பிரியம். காஞ்சிபுரத்தில் நல்ல பட்டுச் சேலைகள் நெய்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| பருத்தி | பஞ்சு | கரிசல்மண் |
| உரோமம் | கம்பளம் | நெய்கிறார்கள் |

**பயிற்சி**

**செய்முறை வேலை :—**

1. பருத்தியிலிருந்து பஞ்சு வேறு, கொட்டை வேறாகப் பிரி.
2. பஞ்சைச் சுத்தம் செய்து பட்டை போடு.
3. தக்கிளியால் நூல் நூற்றுப் பழகு.



# 24. சின்னப் பொம்மை

சின்னச் சின்னப் பொம்மை.
சிங்காரப் பொம்மை.
என்ன வேண்டும் சொல்லே?
ஏனோ பேசவில்லை?

பாட ஆட மாட்டாய்.
பரம சாதுப் பொம்மை.
தேட வைத்து விட்டே
தெருவில் ஓடமாட்டாய்!

கொஞ்சமேனும் உண்பாய்.
கோபம் வேண்டாம், கண்ணே.
பஞ்சு மெத்தை தாரேன்.
படுத்துக் கொள்வாய், கண்ணே.

—அழ. வள்ளியப்பா



# 25. கிறிஸ்துமஸ் பண்டிகை

கிறிஸ்தவர்கள் டிசம்பர் மாதம் கிறிஸ்துமஸ் பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள். இயேசு கிறிஸ்து டிசம்பர் மாதம் 24-ஆம் நாள் இரவு பிறந்தார். டிசம்பர் 25-ஆம் நாளைக் கிறிஸ்தவர்கள் கிறிஸ்துமஸ் பண்டிகையாகக் கொண்டாடுகிறார்கள். கிறிஸ்து பிறந்த நாளைக் கொண்டாடும் பண்டிகை கிறிஸ்துமஸ் பண்டிகை.

கிறிஸ்தவக் கோவில்களில் டிசம்பர் 24-ஆம் நாள் இரவில் கிறிஸ்தவர்கள்

இன்னிசையுடன் பாட்டுக்கள் பாடிக் கடவுளை வணங்குவார்கள். கிறிஸ்துமஸ் நாளன்று அவர்கள் புதிய ஆடைகள் அணிவார்கள். தீபாவளிப் பண்டிகையில் இந்துக்கள் வெடி, மத்தாப்புக் கொளுத்துவது போலச் சில கிறிஸ்தவர்கள் கிறிஸ்துமஸ் நாளன்று வெடி, மத்தாப்புக் கொளுத்துவார்கள்.

கிறிஸ்தவர்களின் வேதப் புத்தகம் பைபிள். நம் வகுப்பில் நான்கு கிறிஸ்தவச் சிறுவர்கள் படிக்கிருர்கள். ஐந்து முகம்மதியச் சிறுவர்களும் படிக்கின்ருர்கள். எல்லா மதங்களும் "அன்பு உள்ளவர்கள் நல்லவர்கள் உண்மை உரைப்பவர்கள் சிறந்தவர்கள்" என்று கூறுகின்றன. மதச் சண்டைகள் போடக் கூடாது. மற்றவர் மதத்தைப் பழிக்கக் கூடாது.




தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தந்
திக்கை வணங்குந் துருக்கர்
கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
கும்பிடும் யேசு மதத்தார்—

யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம்,
பாருக்குள்ளே தெய்வ மொன்று;—இதில்
பற்பல சண்டைகள் வேண்டாம்.

—பாரதியார்

| | | |
|---|---|---|
| பண்டிகை | இன்னிசை | வேதப் புத்தகம் |
| முகம்மதியர் | உரைப்பவர் | பழிக்கக் கூடாது |

ஆசிரியருக்கு

(1) வகுப்பிலுள்ள ஒரு கிறிஸ்துவச் சிறுவனை அவன் வீட்டில் நடந்த கிறிஸ்துமஸ் பண்டிகையைப் பற்றிக் கூறச்செய்க.

(2) வகுப்பில் உள்ள ஒரு முகம்மதியச் சிறுவனை அவன் வீட்டில் நடந்த மொகரம் பண்டிகையைப் பற்றிக் கூறச் செய்க.

(3) வகுப்பிலுள்ள ஓர் இந்துச் சிறுவனை அவன் வீட்டில் நடந்த கார்த்திகைப் பண்டிகையைப் பற்றிக் கூறச் செய்க.



## 26. அளந்து பார்த்தல்

**ஆசிரியர்:** கோபாலா! நேற்று நம் வகுப்பறையை யார் யார் அளந்தார்கள்?

**கோபாலன்:** ஐயா! பெருமாளும் முருகனும் அளந்தார்கள்.

**ஆசிரியர்:** பெருமாள்! நம் வகுப் பறையின் நீளம் என்ன?

**பெருமாள்:** ஐயா! நம் வகுப்பறை யின் நீளம் முப்பது அடி.

**ஆசிரியர்:** முருகா! நம் வகுப்பறை யின் அகலம் என்ன?

**முருகன் :** ஐயா ! நம் வகுப்பறையின் அகலம் இருபது அடி.

**ஆசிரியர் :** கண்ணா ! ஓர் அடிக்கு எத்தனை அங்குலம் ?

**கண்ணன் :** ஐயா ! ஓர் அடிக்குப் பன்னிரண்டு அங்குலம்.

**ஆசிரியர் :** சுந்தரி ! நேற்று நீ உன் அப்பாவுடன் துணிக் கடைக்குப் போனாய் அல்லவா ? அங்கு என்ன வாங்கினீர்கள் ?

**சுந்தரி :** ஐயா ! என் பாவாடைக்குத் துணி வாங்கினோம்.

**ஆசிரியர் :** கடைக்காரர் துணியை எதனால் அளந்து கொடுத்தார் ?

**சுந்தரி :** ஐயா ! துணியைக் கஜக் கோலால் அளந்து கொடுத்தார்.

**ஆசிரியர் :** எத்தனை கஜம் துணி வாங்கினீர்கள் ?

**சுந்தரி :** மூன்று கஜம் துணி வாங்கினோம்.

**ஆசிரியர் :** கோமதி ! ஒரு கஜத்துக்கு எத்தனை அடி ?

**கோமதி:** ஐயா! ஒரு கஜத்துக்கு மூன்று அடி.

**ஆசிரியர்:** வடிவேலா! நமது வகுப்பறைத் தரையில் உள்ள ஒரு செங்கலின் நீளத்தையும், அகலத்தையும் அளந்து சொல்.

**வடிவேலன்:** (அளந்த பின்பு) ஐயா! செங்கலின் நீளம் ஒன்பது அங்குலம்; அகலமும் ஒன்பது அங்குலம்.

**ஆசிரியர்:** நாளை கணக்குப் பாட வேளையில் நம் தோட்டத்தை அளப்போம்.

| | | |
|---|---|---|
| நீளம் | அகலம் | அடி |
| அங்குலம் | கஜம் | அளத்தல் |

**பயிற்சி**

1. அட்டையைக் கொண்டு ஓர் அடிக்கோல் தயார் செய்.
2. தயார் செய்த அடிக்கோலில் அங்குலங்களைக் குறி.
3. அடிக் கோலைக் கொண்டு ஒரு கஜ நீளமுள்ள நாடா வெட்டி எடு.
4. இரண்டு அங்குல நீளம், இரண்டு அங்குல அகலமுள்ள மூன்று அட்டைத் துண்டுகள் வெட்டி எடு.



## 27. யார் நல்லவர்?

ஒரு செட்டியார் ஓர் ஊரிலிருந்து வேறு ஓர் ஊருக்குப் போனர். வழியில் திருடர்கள் அவரைப் பிடித்துக் கொண்டனர்; அவரிட முள்ள பொருள்களைப் பிடுங்கினர்; அவரை அடித்தனர். அவருக்குக் காயம் ஏற்பட்டது. செட்டியார் மயக்கம் அடைந்தார். திருடர்கள் செட்டியாரை அங்கேயே போட்டு விட்டு ஓடி விட்டார்கள்.

சிறிது நேரம் கழித்து அவ்வழியே ஒரு மதத்தலைவர் போனர்; காயம் பட்டுக் கிடந்த

செட்டியாரைப் பார்த்தார்; ஓர் உதவியும் செய்யாமல் ஒதுங்கிப் போய் விட்டார்.

பிறகு ஒரு கோயில் பூசாரி அவ்வழியே போனுர். செட்டியார் அவரைக் கூப்பிட்டார்; உதவி செய்யும்படி கேட்டார். பூசாரியும் அவருக்கு உதவி செய்யவில்லை.

கடைசியாக வேருெரு மனிதர் அவ் வழியே போனுர்; அடிபட்டுக் கிடக்கும் செட்டியாரைப் பார்த்து அருகில் போனுர்; அடிபட்ட இடங்களைத் துடைத்துக் கட்டினுர்; தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தார்; தன் குதிரையின் மீது செட்டியாரைத் தூக்கி வைத்தார். பக்கத்தில் உள்ள சத்திரத்திற்குக் கொண்டு போனுர்; சத்திரத்தில் உணவு வாங்கிக் கொடுத்தார். செட்டியாரின் காயங் களில் அவர் மருந்து தடவினுர். செட்டியார் அம்மனிதருக்கு நன்றி கூறினுர்.

| | | |
|---|---|---|
| காயம் | மயக்கம் | ஒதுங்கிப்போனுர் |
| சத்திரம் | மருந்து | துடைத்துக் கட்டினுர் |

### பயிற்சி

1. செட்டியார் ஏன் மயக்கமடைந்து கிடந்தார்?
2. வழியே சென்ற மூவர்களில் யார் நல்லவர்?



# 28. பசுவும் கன்றும்

தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு—அங்கே
துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி.

அம்மா வென்குது வெள்ளைப்பசு—உடன்
அண்டையில் ஓடுது கன்றுக்குட்டி

நாவால் நக்குது வெள்ளைப்பசு—பாலை
நன்ருய்க் குடிக்குது கன்றுக்குட்டி

முத்தம் கொடுக்குது வெள்ளைப்பசு—மடி
முட்டிக் குடிக்குது கன்றுக்குட்டி

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை.




# 29. ஒற்றுமையின் உயர்வு

ஒரு காட்டில் பல புருக்கள் வசித்தன. இரை தேட அவை எப்பொழுதும் ஒன்ருகப் போகும். ஒரு நாள் ஒரு மரத்துக்கு அடியில் தானியங்கள் கிடப்பதை அவை பார்த்தன. " தானியங்களைச் சாப்பிடலாம்," என்று ஒரு புரு கூறிற்று. மற்ருென்று " வேண்டாம்," என்றது ; " மரத்தடியில் யாரோ தானியங்களைப் போட்டிருக்கிருர்கள். நாம் இறங்கினுல் நம்மைப் பிடித்துக் கொள்ளுவார்கள்" என்றது.

புறுக்களுக்கு நல்ல பசி. "போகலாம், போய்ச் சாப்பிடலாம்," என்று சில புறுக்கள் கூறின. உடனே எல்லாப் புறுக்களும் தானியங்கள் உள்ள இடத்தில் இறங்கின; தானியங்களைக் கொத்தித் தின்றன. அங்கே வலை விரிக்கப்பட்டிருந்தது. புறுக்களின் கால்கள் வலையில் பின்னிக்கொண்டன. ஒவ்வொன்றும் தனியாகப் பறக்க முடிய வில்லை.

மரத்தின் பின்னால் மறைவாக இருந்த வேடன் வெளியே வந்தான். அவன்தான் வலையை விரித்திருந்தான். புறுக்கள் வலையில் மாட்டிக்கொண்டதை அவன் பார்த்தான்; மகிழ்ச்சியடைந்தான்; புறுக்களைப் பிடிக்க வந்தான்.

ஒரு புறு தப்பிக்க வழி சொல்லிற்று. "எல்லோரும் ஒரே சமயம் பறக்க வேண்டும். வலையோடு பறக்க வேண்டும். அடுத்த காட்டில் ஓர் எலி இருக்கிறது. அது நம் நண்பன். அது வலையைக் கடித்து அறுத்து விடும். நாம் தப்பி விடலாம்" என்று அந்தப் புறு கூறிற்று.

உடனே புறுக்கள் ஒன்றாகப் பறந்தன;

வலையோடு மேலே கிளம்பின. வேடன் அதிசயப்பட்டு நின்றான்.

அடுத்த காட்டில் புறாக்கள் இறங்கின. அவைகளின் நண்பனான எலி வலையைக் கடித்துத் துண்டுதுண்டாக ஆக்கிற்று. புறாக்கள் எலிக்கு நன்றி கூறின.

| | |
|---|---|
| பின்னிக் கொண்டன | அதிசயப்பட்டு |
| கொத்தித் தின்றன | துண்டுதுண்டாக |

### பயிற்சி

1. புறாக்களைப் பிடிக்க வேடன் செய்திருந்ததென்ன?

2. வேடனிடமிருந்து தப்பிக்க புறாக்கள் என்ன செய்தன என்பதை ஐந்து வரிகளில் எழுது.

3. வலையோடு பறந்த புறாக்கள் எவ்வாறு விடுதலை அடைந்தன ?



## 30. நிழலுக்கும் வாடகையா ?

ஓர் ஊரில் பண்ணையார் ஒருவர் இருந்தார். அவர் ஒருநாள் பக்கத்து ஊருக்குப் போனார். இரண்டு வேலையாட்களும் அவருடன் சென்றார்கள். வழியில் வெயில் மிக அதிகம். பண்ணையாரால் நடக்க முடியவில்லை. அவர் ஒரு குதிரையை வாடகைக்கு வாங்கினார்; அதன்மேல் ஏறிச் சென்றார். வேலைக்காரர்கள் பக்கத்தில் நடந்து சென்றார்கள். குதிரைக் காரனும் அவர்களுடன் சென்றான்.

வழியில் வெயில் தாங்க முடியவில்லை. பண்ணையார் சிறிது நேரம் நிழலில் தங்க நினைத்தார். வழியில் மரங்கள் இல்லை. நிற்பதற்கும் நிழல் இல்லை. அவர் தரையைப் பார்த்தார்; குதிரையின் நிழல் தரையில் விழுவதைக் கண்டார்; குதிரையை நிறுத்தினார். குதிரையின் நிழலில் அவர் இரண்டு மூன்று துணிகளை விரித்தார்; நிழலில் உட்கார்ந்தார்; சிறிது நேரம் கழித்துக் குதிரையின்மீது ஏறிப் புறப்பட்டார்.

ஊருக்குப் போனதும் குதிரைக்குப் பேசிய வாடகையைக் கொடுத்தார். குதிரைக்காரன் அதிக வாடகை கேட்டான்; “சிறிது நேரம் குதிரையின் நிழலில் தங்கினீர்கள். நிழலுக்கும் வாடகை கொடுக்க வேண்டும்” என்றான். “நிழலுக்கு வாடகை கொடுக்க முடியாது,” என்று பண்ணையார் கூறினார்.

குதிரைக்காரனும் பண்ணையாரும் அவ்வூர் நீதிபதியிடம் சென்றனர்; தங்கள் வழக்கைக் கூறினர். நீதிபதி ஒரு பையில் பணம் கொண்டுவரச் சொன்னார்; பணப் பையைக் குதிரைக்காரன் காதின் பக்கத்தில் குலுக்கினார். பணத்தின் ஒலி கேட்டது.

"பணத்தின் ஒலிதான் நிழலுக்கு வாடகை," என்று நீதிபதி தீர்ப்புக் கூறினர். குதிரைக் காரன் வெட்கத்துடன் தலை குனிந்தான்.

| | | |
|---|---|---|
| பண்ணையார் | வாடகை | நிழல் |
| தீர்ப்பு | வழக்கு | வெயில் |

### பயிற்சி

1. பண்ணையார் குதிரையின் நிழலில் ஏன் தங்கினர்?
2. குதிரைக்காரனும் பண்ணையாரும் ஏன் நீதிபதியிடம் சென்றனர்?
3. நீதிபதி எவ்வாறு தீர்ப்பு அளித்தார்?
4. இக்கதையை நாடகமாக நடிக்க.




## 31. பொங்கலோ பொங்கல்!

நாம் தை மாதம் முதல் நாள் பொங்கல் விழா கொண்டாடுகிறோம். பொங்கல் விழா தமிழர் கொண்டாடும் முக்கிய விழா. பொங்கல் விழாவை உழவர்கள் கொண்டாடுகிறார்கள். தொழிலாளிகள் கொண்டாடுகிறார்கள். யாவரும் கொண்டாடுகிறார்கள்.

எங்கள் வீட்டில் நாங்கள் பொங்கல் விழாவைக் கொண்டாடினோம்; பொங்கலுக்கு முந்திய நாள் வீட்டைச் சுத்தம் செய்தோம்; குப்பைகளை ஓர் இடத்தில் குவித்தோம்;

வேண்டாத பழைய பொருள்களை ஒன்றாகச் சேர்த்தோம்; அவற்றை நெருப்பிட்டுக் கொளுத்தினோம்.

பொங்கலன்று நாங்கள் புதிய ஆடைகளை உடுத்தினோம். அதிகாலையில் அம்மா பொங்கலிட்டார்கள். பால் பொங்கிற்று. "பொங்கலோ பொங்கல்! பொங்கலோ பொங்கல்!" என்று நாங்கள் கூவினோம்; பின்பு பொங்கல் உண்டோம்; கரும்பைத் துண்டு துண்டாக்கித் தின்றோம்.

பொங்கலுக்கு மறுநாள் மாட்டுப் பொங்கல். எங்கள் வீட்டில் இரண்டு காளை மாடுகள் உண்டு. மாடுகளை நாங்கள் நன்றாகக் குளிப்பாட்டினோம்; மாடுகளின் கழுத்தில் மாலை போட்டோம்; பின்பு வண்டியில் ஏறிக்கொண்டு மகிழ்ச்சியுடன் தெருக்களைச் சுற்றினோம்.

**பொங்கலோ பொங்கல்!**
**பொங்கலோ பொங்கல்!!**

| | | |
|---|---|---|
| தமிழர் | குப்பை | குவித்தோம் |
| கொளுத்தினோம் | கூவினோம் | குளிப்பாட்டினோம் |

# 32. பொங்கல்

வெள்ளை யெல்லாம் அடித்து வைத்து,
வீட்டை நன்கு மெழுகி வைத்து,

விடியும் போதே குளித்து விட்டு,
விளக்கு ஒன்றை ஏற்றிவைத்து,

கோலமிட்ட பானையதில்
கொத்து மஞ்சள் கட்டிவைத்து,

அந்தப் பானை தன்னைத் தூக்கி
அடுப்பில் வைத்துப் பாலை ஊற்றிப்

பொங்கிப் பாலும் வருகையிலே
'பொங்கலோ பொங்கல்' என்போம்.

—அழ. வள்ளியப்பா.

## பயிற்சி

1. பொங்கலுக்கு முந்திய நாள் உங்கள் வீட்டில் என்னென்ன செய்வீர்கள்?

2. பொங்கலன்று வாங்கிய காய்கள், கிழங்குகள், பழங்கள் ஆகியவற்றின் பெயர்களைக் கூறு.



## 33. உண்மைக்குப் பரிசு

(ஆற்றங்கரை. மரத்தடியில் ஒரு விறகுவெட்டி தலையில் கையை வைத்துக்கொண்டு வருத்தமாக இருக்கிறான். முனிவர் ஒருவர் வருகிறார். விறகுவெட்டி வருத்தத்துடன் இருப்பதைப் பார்க்கிறார்.)

முனிவர் : அப்பா நீ யார்? ஏன் தலையில் கையை வைத்துக் கொண்டு வருத்தமாக இருக்கிறாய்?

விறகுவெட்டி : ஐயா! நான் ஒரு விறகுவெட்டி. மரத்தில் விறகு வெட்டிக் கொண்டிருந்தேன். என் கோடரி ஆற்றில் விழுந்து விட்டது.

முனிவர் : வருத்தத்துடன் மட்டும் உட்கார்ந்திருந்தால் கோடரி கிடைத்து விடுமா? தண்ணீரில் இறங்கி எடுக்க வேண்டும்.

விறகுவெட்டி : ஐயா! எனக்கு நீந்தத் தெரியாது. ஆற்றில் வெள்ளம் அதிகமாக ஓடுகிறதே! வெள்ளம் குறைய எத்தனை நாட்கள் ஆகுமோ?

முனிவர் : அப்படியானால் வீட்டுக்குப் போ. வேறு கோடரி கொண்டு வந்து விறகு வெட்டு.

விறகுவெட்டி : நானோ ஏழை. என்னிடம் ஒரு கோடரிதான் இருந்தது. அதுவும் போய்விட்டது. இனி நான் பிழைப்பது எப்படி?

முனிவர் : அப்படியா? உனக்கு நான் உதவி செய்கிறேன். உன் கோடரியை எடுத்துத் தருகிறேன். கோடரி விழுந்த இடத்தைக் காட்டு.

(முனிவர் தண்ணீரில் இறங்குகிறார். நீரினுள் மூழ்கி ஒரு கோடரியை எடுத்துக் காட்டுகிறார்.)

முனிவர் : இதோ உன் கோடரி.

விறகுவெட்டி : சுவாமி! இது மஞ்சளாகப் பளபளவென்று மின்னுகிறதே. இது என் கோடரி அல்ல.

(முனிவர் மறுபடியும் தண்ணீரில் மூழ்கி வேருெரு கோடரியை எடுத்துக் காட்டுகிருர்.)

முனிவர் : அப்பா! இதுவா உன் கோடரி? பார்.



விறகுவெட்டி : சுவாமி! இதுவும் என் கோடரி அல்ல. இது வெள்ளையாக இருக்கிறதே, என் கோடரி இரும்புக் கோடரி. அது கருப்பாக அல்லவா இருக்கும்!

(முனிவர் மூன்ருும் தடவை நீரில் மூழ்கி ஒரு கோடரியை எடுத்துக் காட்டுகிருர்.)

**விறகுவெட்டி :** சுவாமி! இதுதான் என் கோடரி.

(முனிவர் மூன்று கோடரிகளுடன் கரைக்கு ஏறுகிறார்.)

**முனிவர் :** அப்பா! நீ உண்மையே பேசினாய். நான் முதலில் காட்டியது தங்கக் கோடரி. இரண்டாவது காட்டியது வெள்ளிக் கோடரி. மூன்று கோடரிகளையும் நீயே வைத்துக்கொள்.

**விறகுவெட்டி :** சுவாமி! உங்கள் உதவியை என்றைக்கும் மறக்க மாட்டேன்.

**முனிவர் :** அப்பா! உண்மைக்கு எப்பொழுதும் பரிசு கிடைக்கும்; போய்வா!

| | | |
|---|---|---|
| கோடரி | வெள்ளம் | பிழைப்பது |
| பளபள | மின்னுகிறது | மூழ்கி |

**பயிற்சி**

வகுப்பில் இந்த நாடகத்தை நடிக்க.

**செய்முறை வேலை :**

அட்டைகளையும் மஞ்சள், வெள்ளை, கருப்புத் தாள்களையும் கொண்டு குழந்தைகளைக் கோடரிகள் செய்யச் சொல்லலாம்.

# செய்யுள்

## 1. கொன்றைவேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
3. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
4. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
5. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
6. ஏவா மக்கள் மூவா மருந்து.
7. ஐயம் புகினும் செய்வன செய்.
8. கிட்டா தாயின் வெட்டென மற.
9. கீழோர் ஆயினுந் தாழ உரை.
10. குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை.
11. கூர்அம்பு ஆயினும் வீரியம் பேசேல்.
12. கெடுவது செய்யின் விடுவது கருமம்.
13. கைப் பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
14. சிவத்தைப் பேணின் தவத்திற்கு அழகு.
15. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
16. சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்.
17. சூதும் வாதும் வேதனை செய்யும்.
18. சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.
19. தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை.
20. தாயின் சிறந் தொரு கோயிலும் இல்லை.

21. திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.
22. தீராக் கோபம் போரா முடியும்.
23. நாடு எங்கும் வாழக் கேடு ஒன்று மில்லை.
24. நிற்கக் கற்றல் சொல் திறம்பாமை.
25. நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
26. நூல் முறை தெரிந்து சீலத்து ஒழுகு.
27. பாலோடு ஆயினும் காலம் அறிந்துஉண்.
28. புலையும் கொலையும் களவும் தவிர்.
29. பையச் சென்றால் வையம் தாங்கும்.
30. மருந்தே ஆயினும் விருந்தோடுஉண்.
31. மாரி அல்லது காரியம் இல்லை.
32. மின்னுக்கு எல்லாம் பின்னுக்கு மழை.
33. மீகாமன் இல்லா மரக்கலம் ஓடாது.
34. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
35. மூத்தோர் சொன்ன வார்த்தை அமிர்தம்.
36. மேழிச் செல்வம் கோழை படாது.
37. ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.
38. வையந் தோறும் தெய்வம் தொழு.
39. ஒத்த இடத்து நித்திரை கொள்.
40. ஓதாதார்க்கு இல்லை உணர்வொடும் ஒழுக்கம்.

## 2. உலகநீதி

ஓதாமல் ஒருருநாளும் இருக்க வேண்டாம்.
ஒருவரையும் பொல்லாங்கு சொல்ல வேண்டாம்.
மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்.
வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்.

போகாத இடந்தனிலே போக வேண்டாம்.
போகவிட்டுப் புறஞ்சொல்லித் திரியவேண்டாம்.
வாகாரும் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

நெஞ்சாரப் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.
நிலையில்லாக் காரியத்தை நிறுத்த வேண்டாம்.
நஞ்சுடனே ஒருநாளும் பழக வேண்டாம்.
நல்லிணக்கம் இல்லாரோடு இணங்க வேண்டாம்.

அஞ்சாமல் தனிவழியே போக வேண்டாம்.
அடுத்தவரை ஒருநாளும் கெடுக்க வேண்டாம்.
மஞ்சாருங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

மனம்போன போக்கெல்லாம் போக வேண்டாம்.
மாற்றானை உறவென்று நம்ப வேண்டாம்.
தனந்தேடி உண்ணுமற் புதைக்க வேண்டாம்.
தருமத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்.

சினந்தேடி அல்லலேயும் தேட வேண்டாம்.
சினந்திருந்தார் வாசல்வழிச் சேறல் வேண்டாம்.
வனந்தேடுங் குறவருடை வள்ளி பங்கன்
மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே.

வார்த்தை சொல்வார் வாய்பார்த்துத் திரியவேண்டாம்
மதியாதார் தலைவாசல் மிதிக்க வேண்டாம்.
மூத்தோர்சொல் வார்த்தைதனை மறக்க வேண்டாம்.
முன்கோபக் காரரோடு இணங்க வேடண்டாம்.

சேராத இடந்தனிலே சேர வேண்டாம்.
செய்த நன்றி ஒருநாளும் மறக்க வேண்டாம்.
ஊரோடுங் குண்டுணியாய்த் திரிய வேண்டாம்.
உற்ருரை உதாசினங்கள் சொல்ல வேண்டாம்.

மறம்பேசித் திரிவாரோடு இணங்க வேண்டாம்.
வாதாடி வழக்கு அழிவு சொல்ல வேண்டாம்.
திறம்பேசிக் கலகமிட்டுத் திரியவேண்டாம்.
தெய்வத்தை ஒருநாளும் மறக்க வேண்டாம்.

இறந்தாலும் பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்.
ஏசலிட்ட உற்ருரை நத்த வேண்டாம்.
குறம்பேசி வாழ்கின்ற வள்ளி பங்கன்
குமரவேள் நாமத்தைக் கூருய் நெஞ்சே.

---

## சொற்கள்

அவன்
அது
அங்கே
அரிசி
அடித்தவுடன்
அன்பாக
அவர்கள்
அணி
அரண்மனை
அடைந்து
அப்பக்கமாக
அடியில்
அலைகள்
அகப்பட்டு
அசைந்து
அம்பு
அறுவடை
அவசியம்
அடுக்கி
அறிவில்
அனுப்பு
அழைத்து
அசைக்கவும்
அமைத்தவை
அழித்து
அக்டோபர்
அளந்து
அங்குலம்
அகலம்
அருகில்
ஆறுமுகம்
ஆசிரியை
ஆண்டு
ஆனி
ஆடுவதில்
ஆச்சரியம்
ஆபத்து
இருக்கிறான்
இடத்திற்கு
இரண்டாவது
இயற்கை
இருபது
இனிய
இரை
இலையின்
இறங்கி
இந்துக்கள்
இறந்து
இல்லாமல்
இடது
இவற்றை
இங்கிலாந்து
இந்தியர்
இரக்கம்
இப்பொழுது
இரவு
இறைத்தது
இன்னிசை
உளுந்து
உட்கார்ந்து
உனக்கு
உதவி
உடனே
உழைப்பவர்கள்
உழவையும்
உண்டோம்
உடையவர்
உயர்ந்த
உண்மை
உடுத்தும்
உரோமம்
உரைப்பவர்கள்
ஊர்களுக்கும்
எனக்கு
என்னிடம்
எழுப்பினான்
என்றாள்
எங்கும்
எடுத்தான்
எண்ணியது
எழுந்தவுடன்
எப்பொழுதும்
எண்ணினார்
எரு
ஏழைகளின்
ஏறிற்று
ஏற்றுவார்கள்
ஏற்பட்ட
ஏப்பிரல்
ஐயா
ஐப்பசி
ஒன்று
ஒடிந்தது

ஒதுங்கி
ஒலி
ஓடுகிறது
ஓமப்பொடி
கதைகள்
கடவுள்
கணக்கு
களைத்து
கண்டாள்
கவி
கரையில்
கடித்தது
கரும்பு
கடற்கரை
கன்னியாகுமரி
கற்கள்
கதவு
கழுவி
கவனம்
கம்பி
கடைசியில்
கனகாம்பரம்
கத்தரி
கரிசல்
கம்பளம்
கஜக்கோல்
கழுத்தில்
சமையல்
சணல்
சத்திரம்
தலையணை
தயவு
தண்ணீரில்
தவறிற்று
தச்சர்

தட்டார்
தட்டுக்கள்
தவத்திற்கு
தந்திரம்
தடவினர்
தரை
தங்கினீர்கள்
நடந்து
நன்றி
நடுவில்
நடுவார்கள்
நமக்கு
நகைகள்
நன்றியுள்ள
நட்டிருக்கிறோம்
நவம்பர்
படுக்கை
பருப்பு
படிப்போம்
பதின்மூன்று
பலர்
பணக்காரன்
படுத்து
பற்பலவும்
பழங்கிழவி
பறித்து
பதினொரு
பதினைந்து
பயிர்
பங்கிட்டு
பரிசுகள்
பண்டிகை
பண்டங்கள்
பட்டு
பயந்து

பக்தி
பதிந்து
பக்குவப் படுத்தி
பங்குனி
பஞ்சு
பருத்தி
பழிக்க
பசி
பண்ணையார்
பழைய
மஞ்சள்
மற்றொரு
மன்னிப்பு
மறவோம்
மலை
மக்கள்
மண்
மன்னர்
மறுத்தனர்
மத்தாப்பு
மறுபடியும்
மகிழ்ச்சி
மதத்தினரும்
மனத்தில்
மணம்
மனைவி
மயக்கம்
மருந்து
வயது
வற்றல்
வகுப்புகள்
வழியில்
வந்தான்
வசித்து
வயல்

வரிசை
வளர்த்தான்
வழக்கம்
வலது
வளையல்கள்
வந்திருந்தனர்
வடை
வக்கீல்
வழி
வரவேற்றார்
வலை
காலை
காட்டு
காப்பாற்று
காக்கும்
காற்று
காப்பி
காணலாம்
கார்த்திகை
காஞ்சிபுரம்
காய்
காயங்களில்
காது
காளை
சாமான்கள்
சாதி
தாத்தா
தாமிரபரணி
தானியங்கள்
தாயாருடன்
தாழ்த்தப்பட்ட
நாற்பது
நாற்காலி
நாங்கள்
நாள்தோறும்

பின்னால்
மிருகம்
மிகவும்
மிதிலை
விரும்பினான்
விளைகிறது
விதை
விளக்கு
விருப்பம்
விரட்டியது
விருந்து
விடுதலை
வித்தை
வியாழன்
கீழே
கீரை
தீபாவளி
நீதிகளை
நீட்டி
நீரின்
நீக்கு
வீட்டிற்கு
குடும்பம்
குளம்
குறி
குற்றாலம்
குட்டை
குயவர்
குடம்
குச்சி
குரைக்கும்
குதித்து
குளிர்
குலுக்கினார்
குனிந்தான்

குப்பைகளை
குவித்தோம்
குளிப்பாட்டி
சுவர்களில்
சுவாமி
சுறுக்கென்று
சுற்றி
சுத்தம்
சுறுசுறுப்பு
சுதந்திரம்
துன்பங்கள்
துணி
புற்று
புகழ்ந்தார்
புகுந்த
புதிய
புளியமரம்
புளியங்காய்
புதன்
முதலியவைகள்
முருங்கை
முடியும்
முற்றத்தில்
நாட்கள்
நாற்று
நான்காவது
நாட்டின்
நாடகம்
நாரிலிருந்து
பாய்
பாடுவோம்
பார்த்தான்
பாய்ச்சுவார்கள்
பாண்டம்
பானை

பாத்திரங்கள்
பாதி
பார்ப்பேன்
பாவாடை
பாத்திகள்
மாமரம்
மாட்டப்பட்டிருக்கின்றன
மாதம்
மாமா
மாங்காய்
மாணவர்கள்
மாடுகள்
மார்கழி
மாசி
மார்ச்சு
வாழை
வாழ்த்து
வாழ்வில்
வாழும்
வாய்க்கால்
வாங்கவில்லை
வாடகைக்கு
கிளையில்
கிழக்கே
கிடைத்தன
கிணறு
கிழமை
கிறிஸ்தவர்
கிறிஸ்துமஸ்
சிலேட்டு
சிறிய
சிறு
சிறந்தவர்
சிவப்பு

திருநெல்வேலி
திருக்கல்யாணம்
திருவிழாக்கள்
திருச்செந்தூர்
திருடன்
திருமணம்
திங்கள்
தின்றோம்
நினைத்தது
பின்புறம்
பிசைவார்கள்
பிரம்பு
பிடித்து
பின்னி
முனிவர்
முயற்சி
முடியவில்லை
முல்லை
முகம்மதியர்
முக்கிய
முந்திய
கூறியிருக்கிறாள்
கூனக்கிழவி
கூழுக்காக
கூறிற்று
கூடாது
கூட்டம்
கூரை
கூட்டில்
கூவினோம்
தூரம்
தூங்கினாள்
தூக்கினர்
நூற்று
நூலால்

பூசாரி
பூட்டி
பூச்செடிகள்
பூச்சிகள்
மூட்டை
கெண்டி
செல்வோம்
செவ்வை
செய்பவர்
செவ்வாய்
செப்டம்பர்
செங்கல்
செட்டியார்
தெரிந்து
தெளிப்பாள்
தெரிந்தவர்களை
தென்னைமரம்
தெனாலி
தெருக்கள்
நெறிகள்
நெல்
நெய்தல்
நெருப்பு
பெண்கள்
பெரிய
பெட்டைக்கோழி
பெருக்கு
பெற்றோர்
மெத்தை
மெதுவாக
வெட்கம்
வெள்ளி
வெடிகள்
வெறுத்தார்
வெற்றி

வெளிச்சம்
வெயில்
கேட்டாள்
தேர்
தேங்காய்
தேய்த்து
தேடி
நேராக
நேற்று
பேசினர்
மேஜை
மேலிருந்த
மேற்கே
வேறு
வேதம்
பைபிள்
மைல்

வைத்து
கொடுப்பார்
கொத்தமல்லி
கொடிகளும்
கொண்டை
கொட்டினேன்
கொத்தி
கொடுப்பார்கள்
கொண்டாடலாம்
தொங்குகின்றன
தொழிலாளிகள்
தொழில்
பொன்
பொருள்கள்
பொங்கல்
பொங்கிற்று
மொத்தம்

கோவில்
கோலங்கள்
கோலாட்டம்
கோணி
சோளம்
தோள்
தோட்டம்
நோட்டு
போடுவாள்
போயுள்ளனர்
போகாது
மோர்
மோதின
ஜனகர்
ஜனவரி
ஜூன்
ஜூலை

